# ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தி வர்ணமாலா ஸ்தோத்ரம்

(ஸ்ரீ தக்ஷிணாமூர்த்திக்குரிய மந்திரமொன்றின் எழுத்துக்களை வரிசையாக ச்லோகத்தின் ஆரம்ப அக்ஷரங்களாக வைத்துச் செய்யப்பட்டதால் ‘வர்ணமாலா ஸ்தோத்ரம்’ எனப்பட்டது.)

**ஓமித்யேதத்3 யஸ்ய பு3தை4ர் நாம க்3ருஹீதம்**
**யத்3பா4ஸேத3ம் பா4தி ஸமஸ்தம் வியதா3தி3 ।**
**யஸ்யாக்ஞாத: ஸ்வஸ்வப3தஸ்தா2 விதி4 முக்2யா:**
**தம் ப்ரத்யஞ்சம் த3க்ஷிணவக்த்ரம் கலயாமி ॥** 1

ஓம் என்ற பிரணவ எழுத்தை எந்த தெய்வத்தின் பெயராகப் பெரியோர்கள் ஏற்றுக் கொண்டிருக்கிறார்களோ, ஆகாயம் முதலான எல்லாப் பொருள்களும் எந்த தெய்வத்தின் ஒளியினாலேயே அறியப்படுகின்றனவோ. பிரம்மா முதலான தேவர்கள் அனைவரும் எந்த தெய்வத்தின் ஆணையினால் தங்கள் தங்கள் இடத்தில் நிலைபெற்றிருக்கிறார்களோ, அந்தத் தெய்வமான தெற்கு நோக்கிய தக்ஷிணாமூர்த்தியை எப்பொழுதும் மனத்தில் நினைக்கின்றேன்.

**நம்ராங்கா3ணாம் ப4க்திமதாம் ய: புருஷார்தா2ன்**
**த3த்வா க்ஷிப்ரம் ஹந்தி ச தத்ஸர்வ விபத்தீ: ।**
**பாதா3ம்போ4ஜாத4 ஸ்தனிதாபஸ்மிருதிமீசம்**
**தம் ப்ரத்யஞ்சம் த3க்ஷிணவக்த்ரம் கலயாமி ॥** 2

எந்த தெய்வமானது பக்தியுடன் தன்னை வணங்குபவர்களுக்கு வேண்டிய புருஷார்த்தங்களைக் கொடுத்து, அவர்களை அணுகும் எல்லா ஆபத்துக்களையும் உடனேயே போக்குகின்றதோ, (அரக்க உருவத்தில் தோன்றிய) அபஸ் மாரத்தைத் தனது (இடது) காலின் கீழ் அடக்கி வைத்திருக்கின்றதோ, அந்தத் தெய்வமான தக்ஷிணாமூர்த்தியை எப்பொழுதும் மனத்தில் நினைக்கின்றேன்.

**மோஹத்4 வஸ்த்யை வைணிக வையாஸிகி முக்2யா :**
**ஸம்விந்முத்3ரா புஸ்தக வீணாக்ஷகு3ணான்யம் ।**
**ஹஸ்தாம்போ4ஜைர்பி3ப்4ரதமாராதி4 தவந்த:**
**தம் ப்ரத்யஞ்சம் த3க்ஷிணவக்த்ரம் கலயாமி ॥** 3

சின்முத்ரை, புத்தகம், வீணை, ருத்ராக்ஷமாலை இவைகளைத் தனது தாமரைக் கைகளில் தரித்துக் கொண்டிருக்கும் எந்த தெய்வத்தைத் தங்களது அறியாமையை விலக்கிக் கொள்வதற்காக நாரதர், சுகர் போன்ற பெரியோர் களும்

அண்டினார்கலோ அந்த தெய்வமான தக்ஷிணாமூர்த்தியை எப்பொழுதும் மனத்தில் நினைக்கிறேன்.

**ப4த்3ராருட4ம் ப4த்3ரத3 மாராத4 யித்ருணாம்**
**ப4க்திச்ரத்3தா பூர்வகமீசம் ப்ரணமந்தி |**
**ஆதி3த்யா யம் வாஞ்சி2த ஸித்3த்யை கருணாப்3திம்**
**தம் ப்ரத்யஞ்சம் த3க்ஷிணவக்த்ரம் கலயாமி ||** 4

பத்ராசனத்தில் வீற்றிருப்பவரும், பக்தி சிரத்தையுடன் தன்னை ஆராதிப்பவர்களுக்கு எல்லா நன்மைகளையும் கொடுப்பவரும், கருணைக் கடலுமான் எவரை எல்லாத் தேவதைகளும் தங்களுடைய விருப்பங்கள் நிறைவேறுவதற்காக எப்பொழுதும் வணங்குகிறார்களோ அந்த தக்ஷிணாமூர்த்தியை எப்பொழுதும் மனத்தில் நினைக்கின்றேன்.

**க3ர்பா4ந்த: ஸ்தா2: ப்ராணின ஏதே ப4வபாச**
**ச்சே2தே3 த3க்ஷம் நிச்சிதவந்த: சரணம் யம் |**
**ஆராத்4யாங்க4ரி ப்ரஸ்பு2ரத3ம்போ4ருஹ யுக்3மம்**
**தம் ப்ரத்யஞ்சம் த3க்ஷிணவக்த்ரம் கலயாமி ||** 5

கருவில் வளரும் எல்லாவகையான உயிரினங்களும் தங்களது பெற தளையை அறுக்கவல்லவராக எவரை நிச்சயித்து சரணடைகின்றனவோ, தன் கத்தக்க், தாமரை போன்ற திருவடிகளை உடைய அந்த தக்ஷிணாமூத்த பொழுதும் மனத்தில் நினைக்கின்றேன். எப்பொழுதும் மனத்தில் நினக்கின்றேன்.

**வக்த்ரம் த4ன்யா: ஸம்ஸ்ருதி வார்த்4தேரதிமாத்ராத்**
**பீ4தா, ஸந்த: பூர்ணச்சாங்கத்3யுதி யஸ்ய - |**
**ஸேவந்தே sத்4யாஸீ நமனந்தம் வடமூலம்**
**தம் ப்ரத்யஞ்சம் த3க்ஷிணவக்த்ரம் கலயாமி ||** 6

பிறவிக் கடலிலிருந்து மிகவும் பயத்தையடைந்த புண்யசாலிகளான நல்லோர்கள் முழு நிலவை ஒத்த எவரது முகத்தையே எதிர் நோக்கி சேவிக்கின்றார்களோ, ஆலமரத்தடி நிழலில் வீற்றிருக்கும் எல்லையற்ற பரம்பொருளான அந்த தக்ஷிணாமூர்த்தியை எப்பொழுதும் மனத்தில் நினைக்கின்றேன்.

**தேஜ: ஸ்தோமைரங்க3த3 ஸங்க4ட்டித பா4ஸ்வன்**
**மாணிக்யோத்தை2ர் பா4ஸித் விச்வோ ருசிரைர்ய: |**
**தேஜோமூர்த்திம் கா2னிலதேஜ: ப்ரமுகா2ப்2தி4ம்**
**தம் ப்ரத்யஞ்சம் த3க்ஷிணவக்த்ரம் கலயாமி ||** 7

தோள்வளையில் பதிக்கப் பெற்ற பிரகாசமான மாணிக்கங்களிலிருந்து தோன்றும் அழகிய ஒளிப்பிழம்புகளால் எல்லா உலகங்களையும் பிரகாசப்படுத்திக் கொண்டிருப்பவரும், ஆகாயம் - காற்று - அக்னி முதலான பூதங்களின் தோற்றத்திற்கு இருப்பிடமாக இருப்பவரும், தன்னொளியோடு விளங்குபவருமான அந்த தக்ஷிணாமூர்த்தியை எப்பொழுதும் மனத்தில் நினைக்கின்றேன்.

**த3த்4யாஜ்யாதி3 த்3ரவ்யககர்மாண்யகி2லோனி**
**த்யக்த்வா காங்க்ஷாம் கர்மப2லேஷ்வத்ர கரோதி ।**
**யஜ்ஜிஜ்ஞாஸாம் ரூபப2லார்தீ2 க்ஷிதிதே3வ:**
**தம் ப்ரத்யஞ்சம் த3க்ஷிணவக்த்ரம் கலயாமி ॥** 8

பூ - தேவர்களான அந்தணர்கள் தயிர், நெய் போன்ற பொருள்களால் செய்யப்பட வேண்டிய (யஜ்ஞாதி) காரியங்களை எல்லாம் அவைகளால் அடையப் பெறும் சிறிய பயன்களைக் கருதாமலேயே செய்து, பின்னர் அதன் (நிஷ்காம்ய கர்ம) பயனாக தங்களது உண்மையான தன்மையையே தாங்கள் அடைவதற்காக எந்த தக்ஷிணாமூர்த்தியையே அறிய விரும்புகிறார்களோ அந்த தக்ஷிணாமூர்த்தியையே எப்பொழுதும் மனத்தில் நினைக்கின்றேன்.

**க்ஷிப்ரம் லோகே யம் ப4ஜமான: ப்ருது2புண்ய:**
**ப்ரத்4வஸ்தாதி4: ப்ரோஜ்ஜி2தஸம்ஸ்ருத்யகி2 - லார்தி ।**
**ப்ரத்யக்3 பூ4தம் ப்3ரஹ்ம பரம் ஸன்ரமதே ய:**
**தம் ப்ரத்யஞ்சம் த3க்ஷிணவக்த்ரம் கலயாமி ॥** 9

புண்யசாலியான ஒருவன் எந்த தக்ஷிணாமூர்த்தியை பஜிப்பதால் சீக்கிரமே மனோவியாதிகள் அழிவுற்று, ஏனைய, பிறவியினால் வரும் துக்கங்களிலிருந்தும் விடுபட்டு உள்ளூறிய தனது பரம்பொருட் தன்மையையே அடைந்து மகிழ்ந்து கொண்டிருப்பானோ அந்த தக்ஷிணாமூர்த்தியையே எப்பொழுதும் மனத்தில் நினைக்கின்றேன்.

**ணாநேத்யேவம் யன்மனுமத்4யஸ்தி2த வர்ணான்**
**ப4க்தா: காலே வர்ணக்3ருஹீத்யை ப்ரஜபந்த: ।**
**மோத3ந்தே ஸம்ப்ராப்த ஸமஸ்தச்ருதி தந்த்ரா:**
**தம் ப்ரத்யஞ்சம் த3க்ஷிணவக்த்ரம் கலயாமி ॥** 10

வேத நூல்களை நன்றாகக் கற்றுணர்ந்த பக்தர்கள் மந்த்ர ஜபகாலத்தில் எந்த தக்ஷிணாமூர்த்தி மந்த்ரத்தின் நடுவிலுள்ள'ணா'என்ற எழுத்தை முக்கியமாகக் கொண்டு ஜபம் செய்து மகிழ்கிறார்களோ, அந்த தக்ஷிணாமூர்த்தியை எப்பொழுதும் மனத்தில் நினைக்கின்றேன்.

**மூர்த்திச்சா2யா நிர்ஜித மந்தா3கினிகுந்த3**
**ப்ராலேயாம்போ4ராசி ஸுதா4பூ4தி ஸுரேபா4 ।**
**யஸ்யாப்3ராபா4 ஹாஸவிதௌ4 த3க்ஷசிரோதி4:**
**தம் ப்ரத்யஞ்சம் த3க்ஷிணவக்த்ரம் கலயாமி ॥** 11

வெள்ளை நிறமான எவருடைய உடலானது மந்தாகினி - (தேவகங்கை) குந்தபுஷ்பம், பனி, பாற்கடல்;'அம்ருதம், விபூதி, ஐராவதம் இவைகளை யெல்லாம் தோல்வியடையச் செய்கின்றதோ, சிரிக்கும் சமயத்தில் விஷமுண்ட எவருடைய கழுத்தானது மேகம் போன்று கருநிறமாக விளங்குகின்றதோ அந்த தக்ஷிணாமூர்த்தியை எப்பொழுதும் மனத்தில் நினைக்கின்றேன்

**தப்தஸ்வர்ணச்சா2ய ஜடாஜூடகடாஹ**
**ப்ரோத்3யத்3 வீசீவல்லி விராஜத்ஸுரஸிந்து4ம் ।**
**நித்யம் ஸூக்ஷ்மம் நித்ய நிரஸ்தாகி2லதோ3ஷம்**
**தம் ப்ரத்யஞ்சம் த3க்ஷிணவக்த்ரம் கலயாமி ॥** 12

புடம் போட்டெடுத்த தங்கத்தின் வண்ணம் போன்ற வண்ணமுடைய எவருடைய கடாஹம் (குன்று) போன்ற ஜடை முடியில் ஆகாய கங்கையானது அலைகளுடன் சுழன்று கொண்டிருக்கிறதோ, அழிவற்றவரும், நுட்பமானவரும், எப்போதும் யாதொரு. குற்றமுமற்றவருமான அந்த தக்ஷிணாமூர்த்தியை எப்பொழுதும் மனத்தில் நினைக்கின்றேன்.

**யேன ஜ்ஞாதேநைவ ஸமஸ்தம் விதி3தம் ஸ்யாத்**
**யஸ்மாத3ன்யத்3 வஸ்து ஜக3த்யாம் சசச்ருங்க3ம் ।**
**யம் ப்ராப்தானாம் நாஸ்தி பரம் ப்ராப்யமனாதி3ம்**
**தம் ப்ரத்யஞ்சம் த3க்ஷிணவக்த்ரம் கலயாமி ॥** 13

எந்த ஸ்வரூபத்தை அறிந்தால் ஏனைய பொருள்களும் அறியப்பட்டதாக ஆகுமோ, எந்த ஸ்வரூபத்தைக் காட்டிலும் வேறானவஸ்துவே உலகில் முயற் கொம்புபோல உண்மையாக இல்லையோ, எந்த ஸ்வரூபத்தை அடைந்தால் பின்னர் அடைய வேண்டியது ஒன்றுமே இருக்காதோ, ஆதியில்லாத அந்த தக்ஷிணா மூர்த்தியை எப்பொழுதும் மனத்தில் நினைக்கின்றேன்.

**மத்தோ மாரோ யஸ்ய லலாடாக்ஷிப4வாக்3னி -**
**ஸ்பூ2ர்ஜத்கீலப்ரோஷித ப4ஸ்மீக்ருத தே3ஹ: ।**
**தத்3ப4ஸ்மாஸீத்3யேஸ்ய ஸுஜாத: படவாஸ:**
**தம் ப்ரத்யஞ்சம் த3க்ஷிணவக்த்ரம் கலயாமி ॥** 14

மதங்கொண்ட மன்மதன் எவருடைய நெற்றிக் கண்ணிலிருந்து உண்டான அக்னி வெடித்து வெளிப்பட்ட ஜ்வாலையினால் சாம்பலாக்கப் பட்டானோ. அந்த

சாம்பலே எவருக்கு அழகான வஸ்திரமாக மாறியதோ அந்த தக்ஷிணாமூர்த்தியை எப்பொழுதும் மனத்தில் நினைக்கின்றேன்.

**ஹ்யம்போ4ராசௌ ஸம்ஸ்ருதிரூபே லுட2தாம் தத்**
**பாரம் க3ந்தும் யத்பத4 ப4க்திர்த்3ருட4 நௌகா ।**
**ஸர்வாராத்4யம் ஸர்வக3 மானந்த3 பயோதி4ம்**
**தம் ப்ரத்யஞ்சம் த3க்ஷிணவக்த்ரம் கலயாமி ॥** 15

பிறவியெனப்படும் பெருங்கடலில் விழுந்து சுழல்பவர்களுக்கு அதன் கரையை அடைய எவருடைய பாதங்களில் வைக்கப்பட்ட பக்தியொன்றே உறுதியான ஓடமாய் உள்ளதோ, எல்லோராலும் ஆராதிக்கத் தக்கவரும் எங்கும் நிறைந்த வரும் ஆனந்தக் கடலானவருமான அந்த தக்ஷிணாமூர்த்தியை எப்பொழுதும் மனத்தில் நினைக்கின்றேன்.

**மேதா4வீ ஸ்யாதி3ந்து வதம்ஸம் த்4ருதவீணம்**
**கர்ப்பூராப4ம் புஸ்தக ஹஸ்தம் கமலாக்ஷம் ।**
**சித்தே த்4யாயன்யஸ்ய வபுர்த்3ராங் மிஷார்த4ம்**
**தம் ப்ரத்யஞ்சம் த3க்ஷிணவக்த்ரம் கலயாமி ॥** 16

சந்திரனைத் தலையணியாகக் கொண்டவரும், வீணையைக் கையில் ஏந்திய வரும். கர்ப்பூர நிறமானவரும், புத்தகத்தைக் கையிலேந்தியவரும், தாமரை போன்ற கண்களையுடையவருமான எவருடைய ஸ்வருபத்தை அரை நொடி நேர மேனும் ஒருவன் மனதில் நினைப்பதால் சீக்கிரமே அறிவின் மேன்மையை அடைவானோ அந்த தக்ஷிணாமூர்த்தியை எப்பொழுதும் மனத்தில் நினைக்கின்றேன்.

**தா4ம்நாம் தா4ம ப்ரௌட4 ருசீனாம் பரமம் யத்**
**ஸூர்யாதீ3 நாம் யஸ்ய ஸ ஹேதுர்ஜகதா3தே3: ।**
**ஏதாவான்யோ யஸ்ய ந ஸர்வேச்வரமீட்3யம்**
**தம் ப்ரத்யஞ்சம் த3க்ஷிணவக்த்ரம் கலயாமி ॥** 17

அதிக ஒளியுள்ள சூரியன் முதலானவைகளுக்கும் எவர் ஒளியைக் கொடுக்கின்றாரோ, எல்லா உலகத்தினுடைய தோற்றத்திற்கும் எவர் காரணமானவரோ, எவர் அளவிடமுடியாதவரோ எல்லாவற்றிற்கும் ஈச்வரனும் துதிக்கத் தக்கவருமான அந்த தக்ஷிணாமூர்த்தியை மனத்தில் நினைக்கின்றேன்.

**ப்ரத்யாஹார ப்ராண நிரோதா4தி3 ஸமர்தை2:**
**ப4க்தைர்தா3ந்தை: ஸம்யத சித்தைர்யதமாநை: ।**
**ஸ்வாத்மத்வேன ஜ்ஞாயத ஏவ த்வரயாய:**
**தம் ப்ரத்யஞ்சம் த3க்ஷிணவக்தரம் கலயாமி ॥** 18

ப்ரத்யாஹாரம் (புலன்களை உள்ளிழுத்தல்) - ப்ராணாயாமம் (மூச்சை அடக்குதல்) முதலியவற்றைச் செய்யும் வல்லமை உள்ளவர்களும், பக்தர்களும், ஐம்புலன்களையும் வென்றவர்களும், மனவடக்கமுள்ளவர்களும், முயற்சி செய் பவர்களுமான சாதகர்களால் விரைவிலேயே இவரே நம்முடைய உண்மையான ஸ்வரூபமானவர் என்று அறியப்படுபவரான் அந்த தக்ஷிணாமூர்த்தியை எப்பொழுதும் மனத்தில் நினைக்கின்றேன்.

**ஜ்ஞாம்சீபூ4தான் ப்ராணின ஏதான்ப2லதா3தா**
**சித்தாந்தஸ்த2: ப்ரோயதி ஸ்வே ஸகலேடபி ।**
**க்ருத்யே தே3வ: ப்ராக்த கர்மானுஸர: ஸந்**
**தம் பரத்யஞ்சம் த3க்ஷிணவக்த்ரம் கலயாமி ॥** 19

அறிவனான இறைவனுடைய இந்த எல்லா உயிர்களுடைய மனத்துள்ளும் உள் இருந்து கொண்டு அவரவர்களை அவரவர்களின் வினைகளின்படி அவரவர்களின் செயல்களில் ஏவல் செய்து கொண்டு அந்தந்தச் செயல்களின் பயன்களை எவர் கொடுத்துக் கொண்டிருக்கிறாரோ அந்த தக்ஷிணாமூர்த்தியை எப்பொழுதும் மனத்தில் நினைக்கின்றேன்.

**ப்ரஜ்ஞாமாத்ரம் ப்ராபித ஸம்வின்னிஜப4க்தம்**
**ப்ராணாக்ஷாதே3: ப்ரோயிதாரம் ப்ரணவார்த2ம் ।**
**ப்ராஹு: ப்ராஜ்ஞா யம் விதி3த்தானுச்ரவதத்வா:**
**தம் ப்ரத்யஞ்சம் த3க்ஷிணவக்த்ரம் கலயாமி ॥** 20

வேதங்களின் உட்கருத்தை நன்குணர்ந்த, அறிவாளிகள் எவரை அறிவு மயமானவர், உண்மை பக்தர்களுக்கு ஞானத்தை அடைவிபவர், பிராணனையும் இந்திரியங்களையும் ப்ரேரணை (ஏவுதல்) செய்பவர். பிரணவத்தின் பொருளானவர் என்றெல்லாம் சொல்கின்றார்களோ, அந்த தக்ஷிணாமூர்த்தியை எப்பொழுதும் மனத்தில் நினைக்கின்றேன்.

**யஸ்யாஜ்ஞானாதே3வ ந்ருணாம் ஸம்ஸ்ருதிபோ3தோ4**
**யஸ்ய ஜ்ஞாநாதே3வ விமோக்ஷோ ப4வதீதி ।**
**ஸ்பஷ்டம் ப்3ருதே வேத3சிரோ தே3சிகமாத்3யம்**
**தம் ப்ரத்யஞ்சம் த3க்ஷிணவக்த்ரம் கலயாமி ॥** 21

எவருடைய உண்மை ஸ்வரூபத்தை அறியாமையாலேயே இந்த பிறவித் தளை ஏற்படுகிறதென்றும், எவருடைய உண்மை ஸ்வரூபத்தை அறிவதனாலேயே இந்த பந்தத்தினின்றும் விடுதலை ஏற்படுகிறதென்றும் உபநிடதங்கள் தெளிவாகக் கூறுகின்றனவோ, ஆதிகுருவான. அந்த தக்ஷிணாமூர்த்தியை எப்பொழுதும் மனத்தில் நினைக்கின்றேன்.

**ச2ன்னேsவித்3யாரூப படேநைவ ச விச்வம்**
**யத்ராத4 யஸ்தம் ஜீவபரேசத்வமபீத3ம் ।**
**பா4னோர் பா4னுஷ்வம்பு3 வத3ஸ்தாகி2லபே4த3ம்**
**தம் ப்ரத்யஞ்சம் த3க்ஷிணவக்த்ரம் கலயாமி ॥** 22

உலகம், உயிர், இறைவன் என்ற பலவகையான வேற்றுமைகளாக, பல நீர்ப்பாத்திரங்களில் பல சூரியர்கள் போன்று, அறியாமையென்றும் ஆடையினால் மறைபட்டுள்ள எவருடைய ஸ்வரூபத்தில் அனைத்தும் ஆரோபிக்கப்பட்டுள்ள வைகளோ, (உண்மையில் அவ்வேற்றுமைகளெல்லாமற்றவரான) அந்த தக்ஷிணா மூர்த்தியை எப்பொழுதும் மனத்தில் நினைக்கின்றேன்.

**ஸ்வாபஸ்வப்னௌ ஜாக்ர3த3வஸ்தா2பி ந யத்ர**
**ப்ராணச்சேத: ஸர்வக3தோ ய: ஸகலாத்மா ।**
**கூடஸ்தோ2 ய: கேவல ஸச்சித்ஸுக2ரூப:**
**தம் ப்ரத்யஞ்சம் த3க்ஷிணவக்த்ரம் கலயாமி ॥** 23

ஜாக்ரத், (விழிப்பு) ஸ்வப்னம், (கனவு) ஸுஷுப்தி (தூக்கம்) எனப்படும் மூன்று உணர்வு நிலைகளும் எவரிடம் இல்லையே, உயிராய் உணர்வாய், எங்கும் நிறைந்தவராய், எல்லா ஆத்மாவுமாய், மாற்றமில்லாதவராய், கலப்பற்ற ஸச்சிதானந்த ஸ்வரூபராய் எவர் இருக்கிறாரோ, அந்த தக்ஷிணாமூர்த்தியை எப் பொழுதும் மனத்தில் நினைக்கின்றேன்.

**ஹாஹேத்யேவம் விஸ்மயமீயுர்முனிமுக்2யா**
**க்ஜ்ஞாதே யஸ்மின் ஸ்வாத்மதயானாத்ம விமோஹ: ।**
**ப்ரத்யக்3பூ4தே ப்3ரஹ்மணி யாத: கத2மித்த2ம்**
**தம் ப்ரத்யஞ்சம் த3க்ஷிணவக்த்ரம் கலயாமி ॥** 24

இவரே தன்னுடைய உண்மையான ஸ்வரூபம் என்று எவரை அறிந்தபின் மாமுனிவர்களும் ,'ஆஹா", உன் முகஞானமான உள்ளுறையும் ப்ரம்ம ஸ்வரூபத்தில் இந்த மெய்ப்பொருளல்லாதவற்றின் மயக்கம் எப்படித்தான் வந்ததோ, போயிற்றோ" என வியப்போ அடைகின்றனரோ அந்த தக்ஷிணாமூர்த்தியை எப் பொழுதும் மனத்தில் நினைக்கின்றேன்.

**யைஷா ரம்யைர் மத்தமயூராபி4த4வ்ருத்தை:**
**ஆதௌ3 க்லுப்தா யன்மனுவர்ணைர் முனிப4ங்கீ ।**
**தாமேவைதாம் தக்ஷிணவக்த்ரா: க்ருபயாஸௌ**
**ஊரீகுர்யாத்3தே3சிக ஸம்ராட் பரமாத்மா ॥** 25

எவருடைய மந்த்ர எழுத்துக்களை முதலெழுத்தாகக் கொண்டு இனிய " மத்த மயூரம்'எனப்படும் விருத்தத்தில் இந்த எழுத்து மாலையானது அமைக்கப் பெற்றுள்ளதோ, இந்த எழுத்து மாலையை முனிவேடம் கொண்ட் குருராஜாவான

தக்ஷிணாமூர்த்தி ஸ்வரூபமான அந்த பரம்பொருள் அருளுடன் ஏற்றுக் கொள்ள வேண்டும்.

